# குருநாதர்



## ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாறும், சட்டமும்.



இயற்றியவர் :

திரு. கீ. ரா. இளங்கோ, B. E.,



வெளியிடுவோர் :

**ஆ. நரசிம்மலு,**

அருள் நகர் கிராமம் அஞ்சல், (வழி) விழுப்புரம் R M.S.

 (5-ம் பதிப்பு) [விலை ந. பை. 1250

# முன்னுரை

இச்சிறு நூலைக் கண்டு மகிழ்கிறேன். வாழையடி வாழையாகத் தோன்றிய இவ் இளம் ஆசிரியர் இளங்கோ, தம் தந்தையும், எனது அன்பிற்குரிய அண்ணலும் ஆகிய திரு. கீ. இராமலிங்கனுர் இயற்றிய "வழி காட்டும் வான் பொருள்" என்னும் அடிகளார் வரலாற்றின் சுருக்கத்தை இந்நூலின் வாயிலாகச் சொற்செறிவு பொருட் செறிவுடன் எழுதித் தந்துள்ளார். தமிழ் மக்கள் இவ்வாசிரியர்க்கும் இவர்தம் தந்தையாருக்கும் பெரிதும் கடமைப்பட் டுள்ளார்கள் என்பது சொல்லாமலே விளங்கும். இத்திருப்பணியில் ஈடுபட்டுள்ள எனது அண்ணலுக்கும் அவரின் அன்பின் மகனுருக்கும் ஆண்டவன் அருள் சுரப்பான் என்பது திண்ணம்.

அடிகளாரை அறியாத தமிழ் மக்கள் வெகு சிலரே யாவர். எனது அன்பிற்குரிய நண்பர் திரு. ஆ. நரசிம்மலு நாயுடு அவர்களின் தொண்டைப் போற்றுத மக்களும் சிலரே யிருப்பர். தமிழ் நாடு முழுதும் சென்று அடி களாரின் சட்டத்தையும், அவர்களது சுகம்பெறு திட்டத் தையும் மக்களிடையே பரப்பி, அவர்களை மகிழ்வுறச் செய்து வருவது வியக்கத் தக்கதே. இச்சிறு நூல் இவ்வரிய தொண்டிற்குப் பெரிதும் பயன் அளிக்கும் என்பதில் எள்ளளவேனும் ஐயமில்லை.

சுவாமிகளின் வாழ்க்கைத் திட்டம் இயற்கையைத் தழுவியதாகும். இன்னல் விளைக்கும் இக்கால நாகரிக வாழ்க்கையின் இடும்பையினின்றும் தப்புவதற்குச் சிறந்த சாதனமாகவும், திறவுகோலாகவும் விளங்குவன இதற்கு முதல் நூலாய் அமைந்துள்ள வழிகாட்டும் வான் பொருளும், இந்நூலும் ஆகும். அடியார்கள் இவ்விரு நூல்களையும் படித்துப் பயன்படுத்திக்கொள்வார்கள் என்று நம்புகிறேன்.

ப. சுந்தரனுர், பி. ஏ., பி. எல்.,
மாவட்ட நடுவர்.
(டிஸ்ட்ரிக்ட் ஜட்ஜ்)

# பதிப்புரை

இரெட்டியப்பட்டி சுவாமிகள் வரலாற்றினையும், அருட்சட்டத்தின் சிறப்பையும், "வழிகாட்டும் வான் பொருள்" எனும் உயரிய அருள் நூலாக வரைந்து உதவிய செந்தமிழ் விளக்க வள்ளலார். திரு. கீ. இராமலிங்கனார், எம். ஏ. அவர்களின் திருப்புதல்வர், திரு. இளங்கோ, பி. இ., அவர்கள் முதல் நூலின் பொருளைச் சுருக்கமாகவும், தெளிவாகவும் தொகுத்து "குருநாதர்" என்னும் இச் சிறு நூலை ஆக்கித் தந்தனர். இவ்விரு சொற்செல்வர்கட்கும் தமிழுலகின் நன்றி என்றும் உரியது. இந்நூலின் பொருளை உணர்ந்து ஒழுகி உண்மையின்பம் எய்துமாறு அனைவரையும் வேண்டுகிறேன்.

திருச்சாத்தனூர்,
26—1—1961.

*இங்ஙன்,*
ஆ. நரசிம்மலு.

# ஆக்கியோன் குறிப்பு

குருநாதர் திரு. இரெட்டியப்பட்டி சுவாமிகளின் வாழ்க்கை வரலாறான இச்சிறு நூல், 'வழிகாட்டும் வான்பொருள்' என்னும் நூலின் சுருக்கமாகும். பெரிய நூலிலிருந்து பெரும்போக்கான கருத்துக்கள் குறையாது சொல்லைச் சுருக்கி வரையும் முறை ஆங்கிலத்தில் உண்டு. என்றால் முடிந்தவரை, 'வழிகாட்டும் வான் பொருளில்' இருக்கும் பெருங் கருத்துக்களை விடாது எடுத்து எழுதியுள்ளேன், அந்நூலில் வழங்கும் சொற்களையும், சொற்றொடர்களையுங் கூட அப்படியே எடுத்துக் கையாண்டுள்ளேன். குற்றம் குறைகள் இருப்பின் அறிவுடையார் பொறுத்து நிறைவு எய்த வாழ்த்துமாறு வேண்டுகிறேன். இந்நூல் எழுதுவதற்கு வாய்ப்பு அளித்த குருநாதரின் திருவருளுக்கும், அன்பர் திரு. ஆ. நரசிம்மலு அவர்களுக்கும் என் நன்றி உரியது.

இளங்கோ.

## உள்ளுறை







# ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் துதி



அன்புசெய் வார்க்கு வேண்டுவ தந்தே
அளித்திடு கருணையை உடையோன்
வன்புசெய் வார்க்கு மறக்கரு ணையினுல்
வகைபடு நலம்வரச் செய்வோன்
முன்புபின் பில்லா முதல்வனென் றின்னம்
முழுமறை முழங்கிடு தலைவன்
நன்மனத் தவர்சூழ் இரெட்டியப் பட்டி
நகர்தனில் குருஎன வந்தோன். 1

தரைபுகழ் வளம்சேர் இரெட்டியப் பட்டித்
தனிநகர் வந்துஅடி யேங்கள்
உரைபுகழ் ஏற்றுஉன் கருணையை அளித்தாய்
உய்ந்தனம் உய்ந்தனம் என்றும்
வரையினில் சிறந்த கயிலையை விட்டு
வந்தனை தந்தனை ஞானம்
குரைகடல் உலகில் கண்ணினிற கண்ட
குறைவிலாத் தெய்வம் நீ அன்ரோ? 2

கண்டிடும் பொருள்கள் பற்பல வாயும்
காணொணுப் பலபொரு ளாயும்
விண்டிட முடியாப் பலபொரு ளாயும்
வேறுமாம் பலபொரு ளாயும்
தொண்டரை யாளும் குருபர னுயும்
துலங்கிடு சத்தியப் பொருளே
மண்டலம் புகழும் இரெட்டியப் பட்டி
வளநகர்க் குருபரா போற்றி. 3



இரெட்டியப்பட்டி சுவாமிகள் துணை.

# குருநாதர்

# இரெட்டியப்பட்டி சுவாமிகள்

## வரலாறும் சட்டமும்

### 1. தோற்றமும் படிப்பும்

திருநெல்வேலிக் கோட்டம், கோவில்பட்டி வட்டம், இரெட்டியப்பட்டி என்னும் சிற்றூரிலே வழிவழியாகச் சிறந்து வந்த, சைவ வேளாள குடும்பத்திலே, மனத் தூய்மையும் மாதவமும் உடையவராய், இல்லற வாழ்க்கையை இயல்பு கெடாது இனிது நடாத்தி வந்த திரு. வீரபத்திரப் பிள்ளை அவர்களும், திரு. ஆவுடை அம்மை அவர்களும், அருந்தவம் செய்தவர்கள் என்பதை உலகம் அறிய ஒரு நிகழ்ச்சி நேர்ந்தது. நள ஆண்டு புரட்டாசி 2-ம் நாள் இரேவதி விண்மீன் கூடிய (கலியுகம் 4957) கி. பி. 1856-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 16 ம் தேதி இவர்களுக்கு அதே ஊரில் ஓர் அருந்திரு ஆண் மகவு தோற்றமாயிற்று.

ஆவுடையம்மை கருவுற்றிருந்த காலத்திலேயே, அவரது நிலையையும் அப்போது நேர்ந்து வந்த நல்ல குறிகளையும் கண்டு, பிறக்கும் குழந்தை, ஒப்புயர்வற்ற அருள்மணியாக இருக்கும் என அவ்வூர் பெரியோர்கள் எண்ணினார்கள். அப்படியே பிறந்த குழந்தையின் முகத்தில், எண்ணலாகாத, எழுதலாகாத, ஒரு பெரும் அருள் ஒளி விளங்கிற்று. குழந்தைக்கு 'சுப்பிரமணியம்' என்ற திருப்பெயர் இட்டு அன்புடன் வளர்த்து வந்தனர்.

மூன்று வயதாயிற்று. இப்பிள்ளை மற்ற குழந்தைகளைப்போல் விளையாட்டில் மனம் செலுத்தவில்லை. தனியாக ஓர் இடத்தில் அமர்ந்துகொள்ளும். வானத்தை நோக்கிக் கை கூப்பித் தொழும். பூசை அறையில் சென்று பூசனை புரியும். இதைக்கண்ட உற்றோரும் மற்றோரும், 'இது ஒரு பைத்தியம்போலும்' என்று சில நேரம் எண்ணினர். சில சமயம் 'இது ஓர் தெய்வப் பிறவிதான்' என உறுதியாக நம்பினர்.

பள்ளிக்குச் செல்லும் வயது வந்தது. அவ்வூரில் ஒரே ஒரு சிறு பள்ளிக்கூடந்தான் உண்டு. அதில் சேர்ந்து சுப்பிரமணியம் படித்தனர். குருவுக்கு விஞ்சிய சீடனாக விளங்குவதைக்கண்ட ஆசிரியரும் இப்பிள்ளையின் திறமையினை வியந்தார். தூய மொழியாம் தண் தமிழைப் படிக்கவும் எழுதவுமே ஓரளவு கற்றுக்கொண்டார் சுப்பிரமணியம். மேற்கொண்டு அவர் பெற்ற ஞானம் எல்லாம் ஓதாது உணர்ந்த ஞானமேயாகும்.

உடலைத் தூய்மையாக வைத்துக்கொண்டால்தான், நல்ல மன உரம் பெறமுடியும் என்ற முடிவுக்கு வந்தார். இம்முடிவு காரணமாகத்தான் இளைஞர் சுப்பிரமணியம் சிலம்பப் பயிற்சி செய்து வந்தது. உயிருக்கு உயர்ந்த வித்தைகளைக் கற்றுக்கொடுக்க வந்த இவ் இளைஞர் உடலுக்குப் பகைவர்களால் தீங்கு நேராது தடுத்துக் கொள்ள வேண்டிய வளம் பெற்று இருத்தல் வேண்டுமல்லவா? அதற்கு இச்சிலம்பப் பயிற்சி பெரிதும் துணையாயிருந்தது.

## 2. உழவும் வாணிபமும்

சுப்பிரமணியத்திற்குப் பதினாறு வயது ஆனவுடன் தாம் பிறந்த குலமாகிய வேளாளக் குடிக்கு ஏற்ப, பயிர்த் தொழிலில் ஈடுபட்டார். ஒரு கலம் விளைந்த நிலம் இரு கலமாக விளைந்து, பல கலமாக விளையத் தலைப்பட்டது, இவர் தம் கைராசியால்.

வேளாண்மைத் தொழில் செய்து வந்த காலத்திலே ஏழைகள் படுந்துயரத்தைக் கண்டு வருந்தலானார். உணவுத் தானியங்களை வாங்கி வந்து விற்கும் சில வணிகர்கள், கொள்ளை லாபம் வைத்து விற்று வந்ததால், மற்றொருபுறம் ஏழைகள் படுந்துன்பம் இவரை வருத்திற்று. அவர்களுக்கு உதவி புரிய மனம் ஓடிற்று. அதன்படி தாமே தூத்துக்குடிக்குச் சென்று உண்பொருள் வாங்கி வந்து ஏன் விற்கலாகாது என்று எண்ணினார். எண்ணியதைச் செயலில் காட்ட முனைந்தார்.

கள்ளர் பயம் நிறைந்த காட்டு வழியிலே, தமது உடல் உரமும் சிலம்பப் பயிற்சியும் துணை நிற்க, வண்டி கட்டிக்கொண்டு முப்பது மைல் தொலைவிலுள்ள தூத்துக்குடிக்குச் சென்று உண்பொருள் வாங்கி வந்து ஏழைகட்குக் கொள் விலைக்கே விற்றார். ஊரவர் இவரைத் தெய்வம் எனப் போற்றினர். அதே நேரத்தில், வணி

கத்தில் நிறையப் பணம் திரட்டித் தருவான் என்று எண்ணி எதிர்பார்த்த பெற்ருேரும், சுற்றமும் ஏமாற்றத்தினுல், இவரை 'அசட்டுப் பிள்ளே' என வெறுத்தனர். சுப்பிரமணியம் எதிர்பார்த்ததுதான் இது:

முன்னரே வீட்டை விட்டு ஏகி, தனித்து இருக்க வேண்டும் என்ற எண்ணம் இவருக்கு உண்டு. அந்த மொட்டு இப்பொழுது அரும்பிற்று. தமது இருபத்து மூன்ருவது வயதிலே வீட்டை விட்டுப் புறப்பட்டு விட்டார், தனியிடம் நாடி.

## 3. மதுரை வாழ்க்கை

வழி நடந்து தாம் செல்லக் கருதியிருந்த ஊராகிய மதுரையை அடைந்தார். அங்கு மீனுட்சியம்மன் சந்நிதிக்கருகில், சீமைச் சாமான் வியாபாரம் செய்துவந்த உ. செ. இ. உருண்டை மீராமுகையதீன் இராவுத்தர் அவர்களது கடையைப்பற்றிக் கேள்விப்பட்டுச் சென்று, அவண் கணக்குப் பிள்ளேயாக அமர்ந்தார். முதலில் கணக்கின் சில பகுதிகளுக்குப் பொறுப்பாளியாக இருந்து, பின்னர் கடைக்கணக்கு முழுவதற்குமே பொறுப்பாளி யாக்கப்பட்டார். வியாபாரம் செழித்து ஓங்கியது.

இப்படிக் கணக்கராக இருந்து வந்த காலத்திலே இவர் காலே மூன்று மணிக்கு எழுந்து, வைகை ஆறு அடைந்து, நன்னீராடி, ஆற்றங்கரையில் 'அமர்ந்திருந்த விநாயகக் கடவுள் ஆலயம் ஒன்றிற்குச் சென்று, உள்ளம் உருகி ஆண்டவனேத் தொழுது வரும் வழக்கமுடையவராக விளங்கினுர். இவர் இப்படிச் செல்வதைச் சிலர் கண்டு இவரிடம் நாளுக்கு நாள் ஒருவித நன்மதிப்பும் மரியாதையும் உடையவராகிவிட்டார்கள். அவர்களில் முக்கியமானவர் மணப்பாறை சேர்வை என்பவர். இவர் குளிப்பதற்குச் சேர்வை ஊற்றுக்குழி போட்டுக் கொடுப்பது வழக்கம்.

## 4. மண வினே

இவரைக் காணுத இவர் பெற்ருேர்கள், இவரைத் தேடி வந்து, மதுரையில் கணக்கராய் இருப்பதைக் கண்டார்கள். திரும்பி ஊருக்கு வரும்படி கூப்பிட்டார்கள். அவர்கள் கருத்து இவருக்கு மணம் முடித்துவிட வேண்டுமென்பது. இவர் உடன் செல்ல மறுக்கவே, இவரது

தமயனாரின் புதல்வரை இவருக்குத் துணையாக இருத்தி விட்டுத் தம் ஊர் திரும்பினார்கள்.

இவரது தந்தையாருக்குத் தள்ளாமை முதிர்ந்து வந்தது. பிள்ளையை மணம் செய்துகொள்ள வற்புறுத்தினார்கள். தந்தை சொல்லை மறுக்க முடியாதவராய் மணத்திற்கு சுப்பிரமணியம் ஒப்புக்கொண்டார். எட்டையாபுரத்தைச் சார்ந்த திரு. வீர தீர கம்பீர முருகப் பிள்ளை என்பவருக்கும், திரு. ஆவுடையம்மையாருக்கும் தோன்றிய மாரியம்மையாரே இவர் தம் மனைவியாராக வாய்த்தனர். மதுரையிலேயே திருமணம் செவ்வனே நடந்தேறியது. மணம் முடிந்த சின்னாட்களுக்கெல்லாம் இவர் தந்தையார் இறைவன் திருவடி அடைந்தார்.

## 5. போற்றும் சாமி

மணமான பின்பும் முன்போல் கடையில் கணக்கராகவே இருந்து வந்தார். அக்காலத்திலே முகத்தில் விளங்கிய அன்பும், அருளும் மக்களை இவர்பால் இழுக்கலாயின; இவரை, 'சுப்பிரமணியம்', 'கணக்குப்பிள்ளை' என்று கூப்பிடும் பழக்கம் நாளுக்கு நாள் குறைந்து, 'சாமி' 'இரெட்டியப்பட்டி சாமி' என்று கூப்பிடும் வழக்கம் ஏற்பட்டது.

இப்படி இருந்த நாளிலே, பெயரும் புகழும் பெற்ற மானாமதுரை சுவாமிகள் என்பவர் இரெட்டியப்பட்டி சுவாமிகள் பால் இழுக்கப்பெற்று மதுரைக்கு வந்து சேவித்துச் சென்றனர். இதைக்கண்டு ஊரார் எல்லாம் வியந்தனர்.

## 6. முன்னவன் காட்சி

சர்வசித்து ஆண்டிலே ஒரு நாள் குளிக்கச் சென்ற இரெட்டியப்பட்டி சுவாமிகளுக்கு ஓர் அதிசயக் காட்சி தோன்றிற்று. அது இவர்கள் பூசித்து வந்த பெருமானரது அற்புதக்காட்சியேயாம். பெருமானை அணைத்து மகிழச் சுவாமிகள் நெருங்கிய பொழுது, அவ்வுருவம் இருந்த இடத்தில், அழகிய ஒரு முன்னவனார் திருவுருவமாகத் தென்பட்டது. சுவாமிகள் அவ்வுருவத்திற்கு நன்னீராட்டி, தீபாராதனை முதலியன செய்யும் வழக்கத்தைத் தம் நாட்கடனாகக் கொண்டார்கள். பரிபூரண விநாயகர் என்று அம்மூர்த்திக்குத் திருநாமம்

சூட்டினுர்கள். இந்த அற்புத விநாயகரைக் காணவும், சுவாமிகள் செய்யும் விடியல் பூசையில் கலந்து கொள்ளவும், ஊரார் பலர், உவந்து குழுமி வரலானுர் கள்.

## 7. பம்பாய்ப் பயணம்

சுவாமிகள் கடையில் வேலை பார்த்து வந்ததால் அவர் களுக்குச் சில நன்மைகள் விளைந்தன. இந்துஸ்தானி மொழியையும், இஸ்லாமிய மதக் கொள்கைகளின் நுணுக்கங்களையும், முகம்மதியர்களோடு தொடர்பு கொண்டு இருந்தமையால், மிக விரைவாகச் சுவாமிகள் கற்றுக்கொண்டார்கள். புது மொழிப் பயிற்சி சுவாமி களைப் புதிய இடத்திற்கு அனுப்ப உதவியது.

கடையில் வியாபாரம் விரைந்து உச்ச நிலை அடைந் தது. பணம் ஏராளமாகப் பெருகியதால், கடை முதலாளி வேறு ஒரு தொழில் ஆரம்பிக்கக் கருதினுர். பம்பாய்த் துறைமுகத்தில், வெளிநாட்டுச் சாமான்களை இறக்குமதி செய்வதும், நம்நாட்டுச் சாமான்களை ஏற்று மதி செய்வதும்தான் அப்புதுத் தொழில். அத்தொழிலைத் திறம்பட நடத்த சுவாமிகள் ஒருவராலேயே முடியும் என்று எண்ணி சுவாமிகளைப் பம்பாய்க்கு அனுப்பினுர். சுவாமிகளும் பம்பாய் சென்று வியாபாரத்தைத் திறம் பட நடத்தினுர்கள்.

மதுரையிலும், பாளையங்கோட்டையிலு முள்ள வியாபாரம் ஓங்கி நடந்து வந்ததால், கடைக் கணக்கை சரிவர வைத்துக்கொள்ள முடியவில்லை. ஆதலால் சுவாமிகளை பம்பாயிலிருந்து திரும்பி வரும்படி கடை முதலாளி வேண்டிக்கொள்ளச் சுவாமிகளும் திரும் பினுர்கள்.

வரும் வழியில் சென்னையில் கிறித்துவப் பாதிரியார் களின் கூட்டுறவால், கிறித்துவ மதத்தின் நுணுக்கங்களை எல்லாம் அறிந்து கொண்டார்கள், சென்னை அரசாங்க அலுவலகங்கள், அறமன்றங்கள், இவற்றைப் பார்த்து அரசாட்சி முறையை யறிந்தார்கள்.

## 8. மீண்டும் மதுரை

சுவாமிகளால் மதுரையில் தொடங்கி வைக்கப்பெற்ற பரிபூரண விநாயகர் உருவ வழிபாடு முறையாக நடந்து வரும் தருணத்தில்தான் சுவாமிகள் பம்பாய் சென்றனர்.

அன்பர்கள் குழாத்திற்கு இது மிக்கத் துயரத்தைத் தந்திருந்தது. இவ்வாறு வருந்திக்கொண்டிருக்கும் பொழுது சுவாமிகள் பம்பாயிலிருந்து திரும்பி வந்து, பழையபடி தம் நாட்கடன்களை மறுமடியும் நடத்தலானார்கள்.

தமக்குரிய கணக்குகளைக் குறித்த காலத்தில் முடித்துவிட்டு, நீராட்டம், வழிபாடு, வந்தனை முதலியன பழையபடி செய்துவந்தார்கள். முன்னைவிட அன்பர் கூட்டம் அதிகரித்தது. பரிபூரண விநாயகருக்கு ஆலயம் அமைத்துக் குடமுழுக்கு செய்யவேண்டும் என்று அன்பர்கள் அவாவினார்கள். சுவாமிகளும் அதற்கு இசையவே, விரைவில் ஆலய அமைப்பும், குடமுழுக்கும் நிறைவேறின.

இந்த ஆலயத்திற்குத் தெற்கிலுள்ள பரந்த வெறும் நிலமாக இருந்த இடத்திற்குக் கடம்பவனம் என்று பெயர். அங்குக் கடம்பவன நாதர் என்ற பெயரோடு ஒரு பெருமானை எழுந்தருளச் செய்யவேண்டும் என்று அன்பர்கள் விரும்பவே, சுவாமிகள் கடம்பவன நாதரை அங்கு அமைத்து ஆலயம் கட்டும் பணியை அன்பர்களுக்குப் பணித்தார்கள்.

## 9. பாடல் ஊற்று

எண்ணங்கள் மனதில் அடர்ந்து எழுகின்றபோது அவை வெளியிலே வந்துதான் ஆகவேண்டும். மனம் எவ்வளவு மடுக்க இயலுமோ அவ்வளவு மட்டுமே மடுக்கும். அதற்கு அதிகப்படின், நன்றாக உள்ளத்தில் ஊறிய கருத்தாயின், அவை பாட்டுக்களாக வெளிவரும்.

சுவாமிகள் விஷயத்திலும் அப்படியே நிகழ்ந்தது. அவர்களது உள்ளக் கருத்துக்கள் பாடல்களாக வெளிவரத் தலைப்பட்டன. சுவாமிகளது பாடல்கள் அவர்கள் மனத்தினுக்கே செய்துகொண்ட உபதேசமும், மற்றவர்கள் மனதை வெற்றி கொள்ளும் அருமையான கருத்துக்கள் பொதிந்தனவும் ஆகும். சுவாமிகள் பெயரும் புகழும் ஊரெங்கும் பரவின. உடல் பிணி மனப் பிணியுள்ளவர்கள் சுவாமிகளிடம் விபூதி பெற்றுத் தம் குறைகளைத் தீர்த்துக்கொள்ள வரும்போது சுவாமிகளது பாடல்களையும் பெற்றுப் பயனுறலானார்கள். பின்னிட்டுச் சுவாமிகள் அடியவரை ஆட்கொள்ள ஆங்காங்குச் சென்றபோதும் பாடல்கள் தோன்றி

வந்தன. அடியவர்கள் குறித்து வைத்துக்கொண்டு பாடும்படி, சுவாமிகள் விரலால் தாளம் தட்டிக்கொண்டு இனிமையாகப் பாடிக்காட்டுவார்கள்.

## 10. ஒடுக்கம், ஊரவர் நடுக்கம்

மக்களைத் திருவருளுக்கு அருகராக்கவேண்டும் என்ற ஒரே கருத்துடைய சுவாமிகள், ஊரார் தம்மைப் புகழ்வதை விரும்பவில்லை. இதனால் தாம் எண்ணிய எண்ணம் கைகூடாமல் போகுமோ என்று ஏங்கி ஏங்கிப் பலகால் அழுதார்களாம். தம் வெளி வேலைகளைக் கொஞ்சம் கொஞ்சமாகச் சுருக்கிக்கொண்டே வந்தார்கள். கடை வேலையைச் சுவாமிகள் இனி முன்னிலும் உன்னிப்பாய்க் கவனிப்பார்கள் என்று கடை முதலாளி மகிழ்ச்சி கொண்டார்.

இந்நிலையில் திடீரென ஒரு நாள் சுவாமிகள் மௌனம் மேற்கொண்டார்கள். அதற்கு ஆறும் நாள் உண்ணு விரதமும் மேற்கொண்டார்கள் கடை வேலையைக் கவனிப்பதையும் கைவிட்டுவிட்டார்கள். ஊரார் இதை அறிந்து சுவாமிகளைப் பார்க்கக் கடையின் முன் கூட்டம் கூட்டமாகக்கூடினார்கள். 'என்ன உடம்பு'? என்ன வேண்டும்,? என்பன போன்ற கேள்விகளைக் கடை முதலாளியும் பிறரும் கேட்டார்கள். அவற்றிற்கெல்லாம் பதில் மௌனமும், சிரிப்புந்தான். இதைக் கண்ட ஊரார் சுவாமிகளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது என்று முடிவு கட்டினார்கள். அவரை விட்டுப் பிரிந்து செல்லத் தலைப்பட்டார்கள். நெருங்கிய அன்பர்கள் மட்டும் கடையருகேயே அமர்ந்து இருந்தார்கள்.

கடை முதலாளிக்கு எது செய்வது என்று ஏற்படவில்லை. சுவாமிகளை அப்படியே அப்புறப்படுத்த நினைத்தார். இதற்குள்ளாகவே சுவாமிகள் மதுரையை விட்டு ஏக முடிவுகட்டிக் கொண்டார்கள். நந்தன ஆண்டிலே யாரும் அறியாத நேரத்திலே, மதுரையை விட்டுச் சுவாமிகள் மறைந்தார்கள்.

சுவாமிகளைக் காணாது கடைக்காரரும், ஊராரும் கலக்கங்கொண்டு, பல இடங்களில் தேடினார்கள். எங்கும் சுவாமிகள் அகப்படவில்லை. சுவாமிகளின் மனைவியாரும், அவர்களது அண்ணன் மகனும் துயரக் கடலில் ஆழ்ந்தார்கள். எது செய்வது என்று புரியாமல்;

வீட்டைக் காலி செய்துகொண்டு இரெட்டியப்பட்டிக்கே போய்விட்டார்கள்.

## 11. பொதிகை குகைத்தவம்

யாரும் காணுத வண்ணம் மதுரை நகரை விட்டுப் புறப்பட்ட சுவாமிகள், பொதிகை மலை பொன்னம்பலக் கூத்தனின் அருளில் கலக்க வேண்டும் என்ற எண்ணம் கொண்டு செல்வாராயினர். திருநெல்வேலி வழியாகச் செல்ல நேர்ந்தது. திருநெல்வேலி சென்றவுடன் திருச்செந்தூர் இறைவனைக் காண அவா எழுந்தது.

திருச்செந்தூர் அடைந்து இறைவனைத் தொழுது பின் பொதிகை நோக்கிப் புறப்பட்டார்கள். பல சிற்றூர் களைக் கடந்து ஓர் ஊரிலும் தங்காமல் சென்று, பொதிகை மலையிலுள்ள, குற்றுல நீர்வீழ்ச்சிக்குத் தென் மேற்கே யுள்ள சண்பகமாதேவி என்னும் இடத்திற்குக் கால்நடையாகச் சென்று அங்குள்ள மறைவான குகை யொன்றில் மனதை யடக்கி யோகத்தில் ஆழ்ந்து விட்டார்கள். காய் கனிகள் அருந்திச் சுனை நீர் பருகினுர்களா? வேறு உணவு ஏதேனும் கொண்டார்களா? என்பது தெரியவில்லை. உடையவனிடத்தில் வெட்கம் விட்டுப் பல நாள் அழுது இருக்கின்றுர்கள் சுவாமிகள். இது மட்டுமே அறியமுடிந்தது.

## 12. அன்னை அரும்பணி

இவ்வாறு இருந்து வந்த நாளிலே சுவாமிகள் உள்ளத்திலே வயது முதிர்ந்த தம் தாய்க்குச் செய்ய வேண்டிய தொண்டையும், கடமையையும் பற்றி நினைவு வந்தது. தனக்காகத் தம் தாய் ஏங்கி இருப்பார்களே என்று அவர்கள் மனதில் பட்டது. ஆகையால் பொதிகை மலையைவிட்டு ஊர் நோக்கிப் புறப்பட்டார்கள். முன்னுல் நடந்த செய்திகளையும், பின் நடந்த சம்பவங்களையும் கொண்டு, சுவாமிகள் ஓர் ஆண்டு மலை வாசம் பண்ணி யிருக்கவேண்டும் என்ற முடிவுக்கு வரவேண்டியிருக் கிறது. சுவாமிகள் தம் சுற்றத்தாரிடம் முன்போல அவ் வளவு நன்ருகப் பழகவில்லை. யாரிடம் எப்படியிருந் தாலும் தம் தாயிடம் மட்டும் கனிந்த அன்பு பூண்டவர் களாகவே யிருந்தார்கள். தம் காலைக் கடனை முடித்துக் கொண்டு தாய்க்குப் பாத பூஜை செய்வதை ஒரு கடமை யாக மேற்கொண்டார்கள்.

## 13. சட்டத்தின் வித்து

சுவாமிகள் இங்கு வந்து தங்கியிருப்பதை அறிந்த மதுரை அன்பர்கள் இவண் வந்து கண்டு தரிசித்துப் போகலானூர்கள். இது கண்டு உள்ளூராரும் சுற்றுப்புறத்தாரும் சுவாமிகளிடம் வந்து திருநீறு வாங்கிச் செல்லலானூர்கள். வரும் அடியார் கூட்டத்திற்கு வீட்டில் இடம் காணுது போயிற்று. இதைக் கருத்தில் கொண்டு, சுவாமிகள் ஊருக்கு மேற்கேயுள்ள கண்வாயின் ஒரமாக தம் அடியார் சிலருடன் உலாவிக் கொண்டிருந்தார்கள். அங்குப் போடப்பட்டிருந்த ஒரு கருங்கல்லின் மேல் சுவாமிகளின் நாட்டம் சென்றது. ஏதோ தோற்றம் ஆயிற்று. சுவாமிகள் தம் அடியாரை அக்கல்லைப் புறட்டும்படிக் கூறினூர்கள். அது ஒரு நல்ல விநாயகர் உருவமாக இருக்கக் கண்டார்கள். ஊருக்குக் கிழக்கேயுள்ள புளியந்தோப்பு ஒன்றில் அதை அமைத்து, ஒரு சிறு பந்தலும் போடச் செய்தார்கள்.

அங்கு வெள்ளிக்கிழமை தோறும் சிறப்பு பூசை நடைபெறும். அப்பொழுது விழுமியதொரு கூட்டம் அவண் கூடும். அன்பர் கூட்டம், அருநிழல் தரும் அப்புளியமரத்தின்கீழ் சுவாமிகளுடன் தங்கச் சௌகரியமாக இருந்தது. பலவகைப் பிணிகளும் மனக்கோளாறும், பாம்புகடி முதலியனவும் போகச் சுவாமிகள் அவண் இருந்து விபூதி அருளிவந்தார்கள். விஷப் பாம்பு கடித்து இறந்தவர்களையும் உடையவன் அருளை நினைந்து திருநீறு தடவி உயிர்ப்பித்து இருக்கின்றூர்கள் சுவாமிகள்.

இப்படி வரும் அன்பர்களுக்கு சுவாமிகள் பல உபதேசங்கள் செய்தார்கள். இங்குதான் சுவாமிகளின் சட்டத்திற்குக் கடைக்கால் போடப்பட்டது. காலையில் எழுந்து பச்சை நீரில் குளித்தல் வேண்டும், குடிக்கக்கூட வெந்நீர் பயன்படுத்தக் கூடாது, என்பன போன்ற உபதேசங்களைச் செய்வார்கள்.

## 14. இடையிடையே பொதிகை

சுவாமிகள் இரெட்டியப்பட்டியில் அன்னையார் பொருட்டு இருந்து வந்தபோதிலும் மனம் பொதிகையில் தான் இருந்தது. ஒருவரிடமும் சொல்லாமல் திடீரென்று புறப்பட்டு விடுவார்கள் பொதிகைக்கு. எங்குச் சென்றூர்கள் என்று ஒருவருக்கும் தெரியாது. சிலநாள்

கழித்துத் திரும்பிவந்து அன்னை வழிபாட்டில் ஈடுபடுவார்கள்.

## 15. அன்னை மறைவு, பின்னை நிலை

இப்படி அங்கும் இங்குமாக இருந்து வரும்பொழுது மன்மத ஆண்டு சுவாமிகளின் அன்னையார் இறைவன் திருவடி நீழல் அடைந்தார். தாய்க்குச் செய்யவேண்டிய ஈமக்கடன்களைத் தம் அண்ணார்களுடன் கலந்து செய்தார்கள். தம் தாயின் உடலை எரிக்கலாகாது என்று கூறிப் புதைக்கச் சொன்னார்கள். சுவாமிகள் சட்டத்தில் இறந்தவர்களை எரிக்கக் கூடாது என்பதும் ஓர் அம்சமாகும். தாய்க்குரிய கடன்களை முடித்த பிறகு வீட்டிலுள்ள சாய்வு நாற்காலியில் சென்று அமர்ந்தார்கள். அப்படியே ஒரு மண்டலம் மௌனமாகி விட்டார்கள். அசைத்து ஆட்டிப் பார்த்தார்கள்; உணர்ச்சியில்லை. சாதாரணமாக உட்கார்ந்திருப்பதால் உயிருக்குப் பயமில்லையென்று கருதி உற்றார் உறவினர் அப்படியே விட்டுவிட்டார்கள்.

நாற்பதாம் நாள் சுவாமிகளைப் பார்க்க வெள்ளையப்பதேவர் என்பவர் வந்தார். சுவாமிகள் கண் விழிக்காதது கண்டு சுவாமிகள் திருமேனியைப் பிடித்து பலமாகக் குலுக்கிப் பல கடுமொழிகளையும் சொன்னார் தேவர். அப்பொழுதுதான் சுவாமிகள் வழிக்கு வருவார்கள் என்பது அவர் எண்ணம்.' சுவாமிகள் வேட்டியைக் கிழித்துக்கொண்டு இயற்கைக்கு மாறான செய்கைகளைச் செய்தார்கள். பைத்தியம் பிடித்துவிட்டது என்று எண்ணி விட்டனர் யாவரும். சுவாமிகள் எழுந்து வெளியே செல்பவர் போலச் சென்றார்கள். கண்மாவரை போகிறார்கள் என்று எல்லோரும் எண்ணினர். ஆனால் சுவாமிகள் யார் கண்ணுக்கும் தெரியாமல் மறைந்தார்கள்.

சுவாமிகளது அடியவர்கள் ஊராரின் மடமைக்கு நொந்தனர். ஊருக்கு ஏதோ ஆபத்து வரப்போகிறது என்று நினைத்தனர். சுவாமிகளைத் தேடும் முயற்சியில் பலர் ஈடுபட்டனர்.

## 16. பொதிகைத் தவத்தில் பூரண அருள்

இங்கு இப்படி யிருக்க, சுவாமிகள் பொதிகை மலை சென்று சமாதியிலேயே அமர்ந்துவிட்டார்கள். ஆண்ட

வன் அருளைப் பூரணமாகப் பெற்றார்கள். இப்படியே சுவாமிகள் ஆண்டவன் அருளில் திளைத்து இருந்து விட்டால் உலகத்தில் சுவாமிகளின் வரவையே எதிர் பார்த்திருப்பவர்கள் கதி என்ன ஆவது? அதனால், அடிய வர்கள் நல்வினை ஒருபுறமும், ஆண்டவனது அருட்குறிப்பு மற்றொரு புறமும் இழுக்க, சுவாமிகள் சமாதி கலைந் தனர். தாம் சிந்தித்து வைத்திருந்த சில திட்டங்களை யும் அவனிடத்தில் விண்ணப்பித்து விளக்கம் பெற்றுக் கொண்டு எந்தையின் திருக்குறிப்பின்படி அடியாரைத் தேடிப் புறப்பட்டனர் சுவாமிகள்.

## 17. பரிந்து ஆளும் பான்மை

விடியல் நேரத்தில் கதிரவன் வரவு அருகுள்ளது என அலரச் சித்தமுறும் கமலங்கள்போல, அடியராதற் குரிய ஆன்மாக்களும் தம்மையும் அறியாது செம்மை பூணத் தொடங்கின. சுவாமிகள் ஆண்டவன் அருள் தம்மை எங்கு எங்குச் செலுத்திற்றோ அங்கங்குச் சென்று, என்ன என்ன, செய்யச் செய்ததோ அதைச் செய்தார்கள். மதுரை முதலிய தம் பழைய ஊர்களுக் குச் சென்றவர்கள் தம் சொந்த ஊராகிய இரெட்டியப் பட்டிக்கும் ஆண்டவன் குறிப்புப்படிச் சென்றனர். மைசூர், பெங்களூர், பம்பாய், காசி, கல்கத்தா. முதலிய நாடுகளையும் பார்த்துக்கொண்டு மீண்டும் தென் தமிழ் நாடு வந்து அடைந்தார்கள்.

அடியார்கள் மனப்பக்குவம் அறிந்து, ஆட்கொள்ளும் காலத்தையும் கணக்கிட்டு சுவாமிகள் குக்கிராமங்களுக் கும், பல ஊர்களுக்கும், அடியவர்கள் அறியாமலேயே சென்று அவர்களை நல்வழிப்படுத்தியுள்ளார்கள். தாம் அமைத்த ஆண்டவன் சட்டத்தையும் பின்பற்றும்படி அருகிலிருந்து பழக்கி வைத்தார்கள். மறுபடியும் மறுபடியும் சென்று வானத்தை வரவேற்கும் வளரும் பயிர்கள்போலக் காத்திருக்கும் அடியார்கள் உறுதி பூண்டு உள்ளங்களிக்க ஆட்கொண்டு அருளினார்கள்,

## 18. அருளின் திருவுரு

சுவாமிகள் தோற்றத்தில் ஒருவகைக் கவர்ச்சி இருந்தது. பழுதற்ற அங்க அமைப்பு, பளிங்கென ஒளி வீசும் விழிகள், சுடர்விடும் திருமுடி. பெருமை மிளிரும் பெருந்தாடி, நடக்கும்பொழுது ஒலியே கேட்காத

திருவடிவைப்பு, உருவத்தில் ஒருவகைத்தெய்வத்தன்மை முதலியன காணக் களிப்பும், மாண மன இழுப்பும் தரும் தன்மையனவாகும்.

உயரிய உண்மைப் பொருள்களைப் பற்றிப் பேசும் பொழுதும் தெள்ளத் தெளிந்த தேன் மொழிகளிலேயே பேசுவார்கள். குயிலின் குரல், நல்வீணை நடு நரம்பின் நல் ஒலி, போல இருக்கும். பேச்சில் ஒருவகை இனிமை பொருந்தி யிருந்தது. கருணையே உருவமானவர்கள். உழைத்த உழைப்பு முழுவதும் கைம்மாறு கருதாததேயாகும். தாமே பல சொல்லிப் பணம் முதலிய பறிப்பதோ, அல்லது அடியார்கள் என்பவர்களைத் தூண்டி அவர்கள் மூலமாகப் பணம் பறிப்பதோ போன்ற கடையான செயல்களைக் கனவிலும் கருதார்கள்! 'வடத்தைக் கையில் எடுத்துவிட வேண்டும். எடுத்துவிட்டால் தேரில் உட்கார்ந்திருக்கும் உடையவன் இழு இழு என்று உற்சாகம் ஊட்டிச் செலுத்திக் கொண்டே போவான்; கட்டாயம் நிமிஷத்தில் நிலை சேர்ந்துவிடலாம்' என்று சுவாமிகள் அடியார்களுக்கு ஊக்கம் பெருகச் சொல்வதுண்டு. சட்டத்தில் சேர்ந்துவிட்டவர்களைத் தவறுமல் காத்துக் கரை சேர்த்துவிடமுடியும் என்பது சுவாமிகளது உறுதியான எண்ணமாகும்.

## 19. அற்புதச் செயல்கள்

சுவாமிகள் திருக்கரங்களால் அநேக அற்புதங்கள் நடந்தன. பலவித மருத்துவர்களும் கைவிட்ட கடுங் காய்ச்சலோடு இருந்தவர்களை நலப்படுத்தியது, கைகால் வராத நிலையில் இருந்தவர்களைச் சரிப்படுத்தியது, மணமாகவில்லையே என்று கவலை யுற்றவர்களைச் சட்டத்தில் சேரவைத்து மணமாகும் படி அருள் செய்தது, பிளவைகளை அறுவை முதலிய எதுவும் இன்றி நலமுறும்படிச் செய்தது, உடைந்துவிட்ட கால்களை ஒன்று கூட வைத்தது, சூனியத்தைப் போக்கியருளியது, குஷ்டரோகத்தால் பீடிக்கப்பட்டவரை சுகப்படுத்தியது, பேய் ஓட்டியது, இழந்த கண்களை திரும்பவும் ஒளிபெறும்படி அருளியது, காசநோயை நீக்கியருளியது, வாதநோய், யானைக்கால் முதலிய வியாதிகளைப் போக்கியது, கிரகதோஷம் இருப்பதாகச் சொன்ன வீட்டில் சுவாமிகள் நுழைந்து அவ்வீட்டுக்குரிய அடியார்கள் மனதில் இருந்த அச்சத்தைப் போக்கியது போன்ற பல அற்புதங்களை நிகழ்த்தினர்கள்.

## 20 திடந் தரு சட்டம்

உலகத்து உயிர்கள் நோய், உடல் உர மின்மை, மன அமைதியின்மை, அழுக்காறு முதலியவற்றால் உழல்வதை சுவாமிகள் கூர்ந்து கவனித்தார்கள். மக்கள் அனைவரும் தவமாற்றுவது போன்ற பழைய கடின வழிகளைக் கையாள்வது இயலாது என்பதையும் கண்டார்கள். மதத்தின் உண்மை தெரியாது, ஒன்று விட்டு ஒன்று பற்றி அல்லற் படுவதையும் பார்த்தார்கள். இவற்றிற் கெல்லாம் ஒரு மருந்தாக சிறந்ததொரு, சுருக்கமான தொரு முறை வகுக்கவேண்டுமென்று கருணை கொண் டார்கள். பொதிகை வாழ்க்கைக்கு அப்புறம் அக்கருணை சுவாமிகளது சட்டமாக உருவாயிற்று. மீறினால் தண்டனை என்பதைக் குறிக்கவே சட்டம் என்ற பெயரினை இட்டார்கள்.

எந்தநாட்டவரும், எந்தமதத்தவரும், இளையவரும் முதியவரும், எந்த வகுப்பினரும், மொழியினரும், வறியவர், செல்வர், கற்றார், கல்லார் என்ற வேறுபாடு இல்லாது ஏற்கக்கூடிய பொதுத்திட்டமாகச் சுவாமிகள் சட்டம் அமைந்தது. சட்டத்தை ஏற்றாருக்கு சுவாமி கள் அன்றுபோல் இன்றும் உறுதுணையாக நிற்கின்றார்கள்.

### i சட்டத்தின் பொதுப்பகுதி

(1) எந்தப் பெயரோடு, எந்த உருவத்தோடு வணங் கினாலும் ஆண்டவன் ஒருவனே. அவர் அவர் விருப்பத் திற்கு இயைந்தவாறு கடவுளின் தோற்றமும், பெயரும் அமைகின்றன. பிறர் வழிபடும் தோற்றத்தையும் பெயரையும் குறை கூறி ஏளனம் செய்தல் கூடாது.

(2) மரக்கறி உணவைத்தவிர வேறு உணவு கொள்ளுதல் ஆகாது. இதற்கு முன் ஊன் உண்பவ ராயினும் சட்டத்தில் சேர்ந்த பிறகு விட்டுவிடுதல் வேண்டும்.

(3) கள் குடித்தல், பொய் பேசுதல், காம வயப் படுதல், உயிர்களைக் கொல்லுதல், திருடுதல் ஆகிய மனிதனைத் தாழ்வு படுத்தும் பாதகங்களை விட்டுவிடுதல் வேண்டும்.

(4) காமவயப்படுதல் தவிர்தல் என்பதால் இல்லறத் தானுக்கு இடமில்லை என்று கருதிவிடக்கூடாது. அளவுக்கு மிஞ்சி அதன் வழிபடக் கூடாது என்பதே சுவாமிகளின் கருத்து.

(5) சைவ வைணவ, முகமதிய, கிறித்தவ, நெறியவர் எல்லாருக்கும் நம்பச் சிறந்த நாளாகிய வெள்ளியன்று விரதம் இருத்தல் வேண்டும்.

(6) செத்தவர்க்கு மண்மறைவுதான் (சமாதி) செய்தல் வேண்டும். எரிக்கக் கூடாது.

## ii சட்டத்தின் சிறப்புப் பகுதி

சுவாமிகளது சட்டச் சிறப்புப் பகுதியில் தலையாயது விடியில் நீராட்டமாகும். இதனைக் காலை 4-மணிக்கு மேல் 5-மணிக்குள்ளாக முடித்தல் வேண்டும். அந்நேரத்தில் தண்ணீருக்கு ஒருவகை சக்தி இருக்கிறது, உடல்மீது கொட்டிக் கொள்வதால், நரம்பு முதலியன வலுவடைகின்றன, மூளை கூர்மையாகின்றது என்று மேல்நாட்டவரும் அறிவியல் ஆராய்ச்சியில் கண்டு பிடித்துள்ளார்கள். குளத்து நீரோ, கிணற்று நீரோ, ஆற்று நீரோ, ஊற்று நீரோ, எந்நீராயினும்சரி, விடியலில் எழுந்து குளித்துவிட வேண்டும். கழுத்துக்குக் கீழே மட்டும் தண்ணீர் விட்டுக்கொள்ளும் பழக்கம் கூடாது. உடலிலுள்ள நரம்பு, நாடி முடிச்சுக்கள் எல்லாம் திரண்டு கிடக்கும் உடலின் சிறந்த பகுதியாகத் தலை இருப்பதால், அதன்மீது தண்ணீர் விடாமல் இருப்பது சரியல்ல.

நீராடுவதற்குப் பச்சை நீரைத்தான் பயன்படுத்தல் வேண்டும் என்பது சுவாமிகளது கட்டளை. காய்ச்சுவதால் அந்நீரின் உயிர்ச்சத்து குன்றிவிடுகின்றது. ஆண்டவன் அருளை எண்ணிக் குளிப்பின் எவ்வித தீங்கும் நேரிடாது. அருந்தும் நீரும் பச்சை நீராகவே இருத்தல் வேண்டும். எவ்வகைச் செயல்களுக்கும் வெந்நீரைத் தொடக்கூடாது.

குளித்த பிறகு அவரவர் மதத்திற்குரிய முறையில் வந்தனை வழிபாடுகள் செய்ய வேண்டும். சைவ வைணவர்கள், குளித்தவுடன் பிள்ளையார் கோயிலுக்குப் போய் வலம் வந்து கும்பிட்டுவிட்டு வருதல் மிக எளிதாகும். ஏனையோர் அவரவர் மதமுறை வழிபாட்டிற்குத் தகுந்த வண்ணம் எளிய முறையில் ஆண்டவனை வழிபடலாம்.

அடுத்தது, மருந்து அருந்தாமையாகும். எந்நோய் வரினும் இயற்கைக்கு மாறான மருந்து அருந்தும் பழக்கம் கூடாது.

உடலைக் கெடுத்துவிடுதலாலும், பழவினையை நுகர வொட்டாது தடுத்தலாலும், புது வினையை வளர்த்த லாலும், தீராத நோய் தீர்த்தருளும் ஆண்டவன் இருக்க அவன் மாட்டு இருக்கும் உறுதிக்கு ஊனம் விளைத்த லாலும், அவன் படைத்த பொருள்களினுல் தீரும் வியாதி அப்பொருள்கள் இன்றி நேரே அவனுலேயே தீர்த்தருள முடியாமற் போகாது என்பதாலும், மருந்து உண்பது ஆகாது என்று சுவாமிகள் பணித்தார்கள்.

பிணி வந்தால் காலையிலும், மாலையிலும் பச்சை நீரில் நீராட வேண்டும். பிள்ளைப்பேறு காலத்திலும் குழந்தை பெற்றவுடன் தாய்க்கும், மகவுக்கும் பச்சை நீர் ஆட்ட வேண்டும். விஷக்கடி, வெட்டு ரணம் முதலியவற்றிற்கும் பச்சை நீராட்டமே செய்ய வேண்டும். ஆண்டவன் நாமத்தை இடைவிடாது தியானித்துக் கொண்டு, திரு நீறும், பச்சைத் தீர்த்தமும் பழக்கப்படின் எதற்கும் அச்சப்படத் தேவையே யில்லை.

சுவாமிகளின் சட்டத்தில் சிறந்த மூன்ருவது பகுதி நிஷ்டை கூடுதல் ஆகும். இரவு படுக்கப்போகும் முன்பு இந்நிஷ்டை கூடுவது யாவர்க்கும் பொருத்தம். விடியல் நீராட்டத்திற்குப் பிறகும் மற்ற நேரங்களிலும் கூடலாம். எந்தவித ஆசன மிட்டாவது எத்திசை நோக்கி யிருந் தாவது நிஷ்டையிலிருக்கலாம். ஆரம்பத்தில் அரைமணி நேரமும், போகப்போக இரண்டு மணி நேரம் வரையும் சாதாரண அளவு. எக்காலமும் சதா நிஷ்டை கூடுவதே நிஷ்டையின் உச்சநிலை.

நிஷ்டையின் பயன் எதற்கும் கடவுளே கதி என்று இருத்தலாகும். ஒரு தனி மனிதன் தானே பிறந்து, தானே வளர்ந்து, பிறர் துணை யில்லாது வாழ்ந்து விட முடியாது என்ருலும், அருள் வடிவான ஆண்டவன், அற்ருருக்கு உதவி செய்ய இருக்க, நம்மைப்போல அல்ல லுக்கு ஆளாகும் மனிதரை நம்மைக் காக்கக்கூடியவர்கள் என நம்பி, அவருக்கே அடிமை ஆவதை சுவாமிகள் வெறுத்தனர். அதனுல்தான் 'நம்மைப் போல உயிரை நாடாமை' என்ற சட்டம் இயற்றினர்.

நாள் நட்சத்திரத்தின் போக்கு, கோள்களின் இயக்கம் முதலியவை பற்றி நம் முன்னேர்கள் வரைந்து வைத்திருப்பதை சுவாமிகள் பொய் என்று சொல்ல வில்லை. ஆனுல் நாளும் கோளும் எந்தையின் அருளுக்கு அடங்கினவை யாகையால், அந்த அருளை மீறி அவை

செல்லா; ஆகையால் அவற்றை நம்பத் தேவையில்லை என்று குறித்தனர். மணி, மந்திரம், சகுனம், ஆருடம், சாதகம் முதலியவற்றை ஒதுக்க வேண்டு மென்பது சுவாமிகளின் சட்டமாகும்.

ஆண்டவன் படைத்த பொருள்களையே அவனுக்குத் தருவதாய்ப் பிரார்த்தனை செய்து கொள்வது, எது எது எவ்வெப்பொழுது செய்ய வேண்டும் என்று தெரிந்து செய்யும் ஆண்டவனுக்குக் கைக்கூலி கொடுத்து ஏமாற்றப் பார்ப்பது போல இருப்பதால் பிரார்த்தனை செய்து கொள்ளலாகாது என்று சுவாமிகள் சட்டம் செய்தனர்.

அற மன்றம் சென்று பொய் வழக்காடுதல் முதலியவும், இறந்தோர்க்கு இரங்குதலும் கூடாது என்பதும், சுவாமிகளின் சட்டமாகும்.

சட்டத்தை மீறலாகாது என்று உறுதி கொண்டவன், தன்னையும் கடந்த காரணம்பற்றி, சட்டத்தை மீறும்படி நேரிட்டால் அது சட்டம் மீறுவதாகாது. மற்றபடி வேணுமென்றே, மறந்து விட்டோ சட்டத்தை மீறினால் அறிவுறுத்தித் திருத்தும் வண்ணம், ஆண்டவன் கருணையினால் அவர்களுக்கு உடலில் ஏதாவது வலியோ, அல்லது திடீரென்று பூச்சுக் கடியால் வருவது போன்ற வீக்கமோ பிறவோ தோன்றும். செய்த குற்றத்தை நினைத்து வருந்தி, ஆண்டவ னிடம் முறையிட்டு, திருந்தி விட்டால் ஏற்பட்ட இடையூறு நீங்கிவிடும்.

தூய நல் வாழ்க்கை வாழவும், உடையவனிடத்து மட்டில்லா உறுதி பெறவும் சுவாமிகளது சட்டம் ஒரு சிறந்த வழி காட்டும் வான்பொருளாக இருக்கின்றது.

## 21. இன்றும் அருளுகிறார்

கி. பி. 1923-ல் துந்துபி மார்கழி 28-ம் நாள் அனுஷ விண்மீனில் சுவாமிகள் மறைவு எய்தி இறைவனருளில் இரண்டறக் கலந்து, இரெட்டியப்பட்டியில், பிறந்த அதே இடத்தில், கோவில் கொண்டிருக்கிறார்கள். திருமேனி தாங்கி அருள் ஆட்சி புரிந்து அடியவரை நேரில் ஆட்கொண்டு வந்த அன்றுபோல, இன்றுங்கூட சுவாமிகள் அவர்களை நேரில் காணாத அன்பர்களையும், தோன்றாத் துணையாகவும், அருள்பெற்ற அடியார்கள் வழியாகவும் அதியற்புதமாக ஆட்கொண்டு அருளி வருகிறார்கள்.

இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருவடி வாழ்க!
இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருவருள் வெல்க!



## இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கம்

சுவாமிகள் திருப்பெயரால் சங்கம் ஒன்று நிறுவப் பெற்றுள்ளது. அதன் அலுவலகம் தற்போது விழுப்புரம்-திருச்சிராப்பள்ளி குறுக்கு இருப்புப் பாதையில் திருவெண்ணெய் நல்லூர் புகை வண்டி நிலையத்திற்கு அண்மையில் உள்ள அருள் நகரில் அமைந்துள்ளது. சுவாமிகள் திருப்பெயரால் இலவச மாணவர் விடுதியும், 'அருட்கொடிப்பள்ளி' என்ற பெயரில் உயர்தரத் துவக்கப் பள்ளியும் அங்கு நடைபெற்று வருகின்றன.

## இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில்

திருநெல்வேலி மாவட்டத்தில், கோவில்பட்டி புகை வண்டி நிலையத்திலிருந்து புதூர் செல்லும் பேருந்தில் (பஸ்ஸில்) சென்று, நாகலா புரத்தில் இறங்கினால், கிழக்கே அரை மைல் தொலைவில் தோன்றும் திருவூரே இரெட்டியப்பட்டியாகும். அங்குதான் சுவாமிகள் திரு அவதாரம் செய்தார்கள். இரெட்டியப்பட்டி சுவாமிகள் என்று உலகெலாம் போற்ற அருள் திருமேனி தாங்கி அவனி மீது உலவினார்கள். அருள் சட்டம் வழங்கினார்கள். இரெட்டியப்பட்டியில் அன்னை திருவயிற்றிலிருந்து நிலவுலகில் அவதரித்த இடத்திலேயே திருக்காப்பிட்டுக் கொண்டு, கோயில் கொண்டருளியுள்ளார்கள். இப்போதுள்ள கோயிலும், ஓட்டுக் கட்டிடமும் சுவாமிகள் மறைந்தருளிய வுடனேயே சுவாமிகளின் திருவருள் துணைகொண்டு அடியவர்களால் கட்டப்பெற்றன. மூல, உத்ஸவ மூர்த்திகளும், கோயில் வழிபாட்டுக்கும், விழாக் காலங்கட்கும் தேவையுள்ள பலவும் அடியவர்கள் கைங்கரியமாகவே அமைந்துள்ளன. இக்கோயில் இரெட்டியப்பட்டி சுவாமிகள் சங்கத்தின் நிர்வாகத்தில் இருந்து வருகிறது. கோயிலைச் சுற்றிலும் உள்ள சில பகுதிகளைச் சங்கத்தினர் அவ்வப்போது விலைக்கு வாங்கியுள்ளனர்.

## திருக்கோயில் திருப்பணி விண்ணப்பம்

இதுபோதுள்ள சந்நிதி மிகச் சுருக்கமாக இருப்பதால், அடியவர்கள் அண்மையில் சென்று வழிபடுவதற்கு வசதி குறைந்ததாக இருந்து வருகிறது. சிற்பநூல் முறைப்படி கர்ப்பக்கிருஹத்தையும், அர்த்த மண்டபத்தையும் சிறிது விரிவாக்கவும், உத்ஸவ

மூர்த்திக்குத் தனி இடம் அமைக்கவும், சுற்றுப் பிராகாரம், கோபுரம் முதலியன அமைக்கவும், வெளி மதில் கட்டவும், மிஞ்சியுள்ள இடத்தில் அடியவர் களுக்காக விடுதி அமைக்கவும் ஆண்டவர் திருவருளை முன்னிட்டு நிச்சயிக்கப் பெற்றுள்ளது.



ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில்
கெர்பக்கிருஹமும் அர்த்தமண்டபமும்

இத்திருப்பணியை இனிது செய்து முடிக்க ''வழி காட்டும் வான் பொருள்'' ஆசிரியரும், ஸ்ரீ இரெட்டியப் பட்டி சுவாமிகள் சங்கத் தலைவரும், சென்னை மாநில ஆட்சி மொழிக்குழுத் தனி அலுவலருமான ''செந்தமிழ் விளக்க வள்ளலார்'', ''ஆட்சிச் சொற் காவலர்''

உயர்திரு. கீ. இராமலிங்க முதலியார் எம், எ., அவர்கள் தலைமையில் திருப்பணிக்குழு ஒன்று நிறுவப் பெற்றுள்ளது.




கர்ப்பக்கிருஹம், அந்தராளம், அர்த்த மண்டபம், பிராகாரம், கோபுர வாயில், உத்ஸவர் கோவில், நாலு கால் மண்டபம் ஆகியவற்றைக் கருங்கல்லால் அழகுறக் கட்டுவதென்றும், கர்ப்பக்கிருஹ விமானம், கோபுரம், தெற்கு வாயில் சாலாஹாரம் ஆகியவற்றைச் செங்கற் பணியாகச் செய்வதென்றும், விமானத்திலும், கோபுரத்

திலும் சுதைப் படிமங்கள் அமைப்பதென்றும் திட்டமிடப் பெற்றுள்ளது.

இவற்றுக்கும் அடியவர்கள் தங்கும் விடுதி முதலியவற்றுக்கும் சேர்ந்து மொத்த மதிப்பு சுமார் ரூபா ஒரு லட்சம் என்று கணக்கிட் டிருக்கிறார்கள். இத்தொகை அன்பர்கள், அடியவர்களிட மிருந்தே திரண்டு வரவேண்டியுள்ளது. திருவருள் உணர்த்திய வண்ணம் ரூபா 100, 50, 25, 10, 5, 3, 2, 1- நன்கொடைச் சீட்டுகள் அச்சிடப் பெற்றுள்ளன. அன்பர்களும் அடியவர்களும் அவற்றை ஏற்றுப் பகிர்ந்து கொண்டு, கீழ்க்காணும் முகவரிக்குத் தொகையை அனுப்பி வந்தால், திருப்பணி அருட்பாங்கின் வண்ணம் நடந்து கொண்டே யிருக்கும்.

நன்கொடைச் சீட்டுகளில் குறிப்பிட்டுள்ள தொகைகளைத் தவிர, பெரு அளவிலும், மிகப்பெரு அளவிலும், சிறு அளவிலும் கூடத் தத்தமது சக்திக்கும், திருவுளப் பாங்கிற்கும் ஏற்ற வண்ணம் கொடுத்து உதவி திருப்பணியில் பங்கு கொள்ளலாம். அன்றியும். திருப்பணிக்குப் பயன்படத் தக்க சில, பல பொருள்களையும் கொடுத்து உதவலாம். அல்லது திருப்பணியின் குறிப்பிட்ட பகுதியையோ, பகுதிகளையோ சொந்தப் பொருட் செலவில் செய்து கொடுத்தும் உதவலாம். இதர விவரங்களுக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

இத்திருப்பணி இனிது தொடங்கி, விரைவில் முடிவு பெற அன்பர்களும் அடியவர்களும் நிறைந்த ஆர்வம் கொள்ளவேண்டும் என்று எல்லாம் வல்ல அப்பெருமானின் அருட் பெருமைக்கு விண்ணப்பித்துக் கொள்ளுகின்றோம்.

இங்ஙனம்,

திருச்சாத்தனூர் } ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள்
26—1—1961 } திருக்கோயில் திருப்பணிக் குழுவினர்

இரெட்டியப்பட்டி
நாகலாபுரம் அஞ்சல் (வழி) கோவில்பட்டி(S. Ry)



M. L. J. Press, TDR.

## ஸ்ரீ இரெட்டியப்பட்டி சுவாமிகள் திருக்கோயில் தரைப்படம்






1. மூலஸ்தானம் 2. அர்த்த மண்டபம் 3. உத்ஸவர் கோயில் 4. கோபுர வாயில்.